ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

# இலங்கை சட்டக் கல்லூரியின் கல்வியாண்டு 2019 இற்கு மாணவர்களை அனுமதிப்பதற்கான போட்டிப் பரீட்சை - 2018 செப்தெம்பர்

# Competitive Examination for Admission of Students to Sri Lanka Law College for Academic Year 2019 - September 2018

(01) மொழித்திறன்
Language Skills

மூன்று மணித்தியாலங்கள்
Three hours

## பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள்

**மிக முக்கியம் :**




✳ விடை எழுதும்போது பின்வருமாறு இலக்கங்கள் எழுதப்படாத விடைத்தாள்கள் மதிப்பிடப்படமாட்டாது.

**1 2 3 4**

உமது சுட்டெண்ணை இங்கேயும் மூன்றாம் மற்றும் ஐந்தாம் பக்கங்களிலும் எழுதுக.

.....................................

சரியானது என உறுதிப்படுத்துகின்றேன்.

.....................................
நோக்குனரின் முதலெழுத்தொப்பம்

**முக்கியம் :**

✳ இவ்வினாத்தாள் 10 பக்கங்களில் 38 வினாக்களைக் கொண்டுள்ளது.

✳ எல்லா வினாக்களுக்கும் விடைகளை இத்தாளிலேயே எழுதுக.

✳ மண்டப மேற்பார்வையாளரின் அறிவித்தலின் பின்னரே விடைகளை எழுதத் தொடங்குக.

✳ உமக்குத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப விடைகளை எழுதுக. அறிவுறுத்தல்களுக்கு அமையாத விடைகளுக்குப் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.

✳ விடைகள் தரப்படாவிட்டாலும் வினாத்தாளை மண்டப மேற்பார்வையாளரிடம் கையளிக்க வேண்டும்.

✳ கறுப்பு அல்லது நீல நிறப் பேனையினால் மாத்திரம் தெளிவாக விடைகளை எழுதுக. பென்சிலைப் பயன்படுத்த வேண்டாம்.

✳ இவ்வினாத்தாளைப் பரீட்சை மண்டபத்திற்கு வெளியே கொண்டு செல்லல், அதன் ஒளிப்பிரதியை (photocopy) எடுத்தல் என்பன குற்றமாகும்.

✳ தெளிவற்ற இலக்கம், தெளிவற்ற கை எழுத்துகள், அழிக்கும் வெண்மைப் பயன்பாடு, பென்சிலைப் பயன்படுத்தி எழுதிய விடைகள் என்பவற்றுக்கு மதிப்பீட்டின்போது புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| பக்க எண் | வினா எண் | பெற்ற புள்ளிகள் |
|---|---|---|
| 2 | 1 - 11 | |
| 3 | 12 - 21 | |
| 4 | 22 - 32 | |
| 5 | 33 -35 | |
| 5 - 7 | 36 | |
| 7 - 8 | 37 | |
| 8 -10 | 38 | |
| மொத்தம் | | |

**இறுதிப்புள்ளிகள்**

| | |
|---|---|
| இலக்கத்தில் | |
| எழுத்தில் | |

| | |
|---|---|
| விடைத்தாளைப் பரீட்சித்தவர் | |
| புள்ளிகளைப் பரீட்சித்தவர் | |

[பக் 2 ஐப் பார்க்க.

● **1** தொடக்கம் **3** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் தரப்பட்டுள்ள சொற்களுள் ஒரு சொல் பிழையாக எழுதப்பட்டுள்ளது. அச்சொல்லைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

1. (1) தாபரிப்பு (2) தாற்ப்பரியம் (3) ஆட்சேர்ப்பு (4) கொலைகாரன் (.........)

2. (1) சாட்சியம் (2) வறிதாக்கல் (3) காப்புறுதி (4) வித்யாசம் (.........)

3. (1) ஏலாமை (2) உன்னதம் (3) வாள்ப்போர் (4) பராயம் (.........)

● **4** தொடக்கம் **6** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் தரப்பட்டுள்ள சொற்களின் அகராதி வரிசையை மிகச் சரியாகக் காட்டி நிற்கும் விடையைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

4. (அ) சமாதானம் (ஆ) யவனர் (இ) கோரிக்கை (ஈ) ஞானம்
(1) ஆ, இ, அ, ஈ (2) அ, இ, ஈ, ஆ (3) இ, அ, ஆ, ஈ (4) இ, அ, ஈ, ஆ (.........)

5. (அ) அரக்கன் (ஆ) அம்மி (இ) அலவாங்கு (ஈ) அகோரம்
(1) ஈ, அ, இ, ஆ (2) ஈ, ஆ, அ, இ (3) இ, அ, ஈ, ஆ (4) ஈ, ஆ, இ, அ (.........)

6. (அ) வைராக்கியம் (ஆ) வேய்தல் (இ) வெளவால் (ஈ) யுத்தம்
(1) இ, ஆ, அ, ஈ (2) ஆ, அ, இ, ஈ (3) அ, ஆ, இ, ஈ (4) ஈ, ஆ, அ, இ (.........)

● **7** தொடக்கம் **9** வரையிலான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்களைப் புணர்த்தினால் வரும் புணர்மொழியைச் சரியாகக் காட்டும் விடையைத் தெரிவு செய்து அதனைக் குறிக்கும் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

7. வேம்பு + இலை
(1) வேப்பிலை (2) வேம்பிலை (3) வேப்பமிலை (4) வேம்பினிலை (.........)

8. பனை + காய்
(1) பனம்காய் (2) பனைக்காய் (3) பனையின்காய் (4) பனங்காய் (.........)

9. புல் + தரை
(1) புல்லுத்தரை (2) புற்றரை (3) புல்த்தரை (4) புல்லின்தரை (.........)

● **10** வினாவில் மாறியுள்ள எழுத்துக்களை ஒழுங்குபடுத்தினால் கருத்துள்ள சொல்லொன்று வரும். அச்சொல்லை வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(01 புள்ளி)*

10. சா, ந், கு, டு, ற, ஞ், ட் (.......................)

● **11** தொடக்கம் **15** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் தரப்பட்டுள்ள வாக்கியங்கள் பிழையாயின் அவற்றைத் திருத்தி சரியான வாக்கியங்களை வினாவின் கீழே தரப்பட்டுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக. அது சரியாயின் 'சரி' என்று மட்டும் **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(05 புள்ளிகள்)*

11. பறவைகள் அனைத்தும் பறந்தோடிற்று.

......................................................................................................................

......................................................................................................................

[பக் 3 ஐப் பார்க்க

12. நந்தனுடன் நல்லதங்காள் எங்கள் வீட்டுக்கு வந்தாள்.

..........................................................................................

..........................................................................................

13. அவன் ஒவ்வொரு நாட்களிலும் காலையில் தேநீர் அருந்துவான்.

..........................................................................................

..........................................................................................

14. விசாரணை அறிக்கை ஆளுநரிடம் கையளித்தனர்.

..........................................................................................

..........................................................................................

15. அவன் அடிபட்டு விழுந்தபோதிலும் காயமெதுவும் அவனுக்கு ஏற்படவில்லை.

..........................................................................................

..........................................................................................

● **16** தொடக்கம் **20** வரையிலான வினாக்களிலே தரப்பட்டுள்ள மரபுச்சொற்றொடர்கள் ஒவ்வொன்றும் தரும் சரியான கருத்தைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(05 புள்ளிகள்)*

16. ஆறப்போடுதல்
    (1) இளைப்பாறல் (2) சூடு தணியும் வரை பொறுத்திருத்தல்
    (3) பின்போடுதல் (4) ஆற்றில் நனையவிடல் (.........)

17. கதை கட்டுதல்
    (1) நாடகப் பிரதி தயாரித்தல் (2) பொய்ச்செய்தி கிளப்புதல்
    (3) கற்பனை செய்தல் (4) கதையெழுதத் திட்டம் போடல் (.........)

18. தலைப்பாரம்
    (1) ஆங்காரம் (2) சுமைதாங்கி
    (3) தலைச்சுமை (4) அளவுகடந்த பொறுப்பு (.........)

19. கையாடுதல்
    (1) கைப்பற்றல் (2) கைகழுவுதல்
    (3) கைகொடுத்தல் (4) பிறர் பொருளை அபகரித்தல் (.........)

20. கிள்ளுக்கீரை
    (1) மென்மை (2) அற்பம்
    (3) பசுமை (4) சுலபம் (.........)

● **21** தொடக்கம் **23** வரையிலான வினாக்களில் தரப்பட்டுள்ள பழமொழிகள் ஒவ்வொன்றும் தரும் கருத்தினைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

21. அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு
    (1) பதவி கிடைத்தால் கர்வம் அதிகரிக்கும்
    (2) உடல் பருத்தால் கொழுப்பு அதிகரிக்கும்
    (3) ஒற்றுமையே பலம்
    (4) அடம்பன் கொடி முதிர்ந்தால் நிமிர்ந்துவிடும் (.........)

22. ஆனைக்கும் அடி சறுக்கும்
   (1) உடல்பருத்தவர்கள் கவனமாக நடக்கவேண்டும்
   (2) பெரியோரும் தவறலாம்
   (3) ஆனை பெருத்தால் அதன் நடை தளரும்
   (4) மதங்கொண்ட யானை அதன் பாகனையே தாக்கலாம் (.........)

23. பாடின்றிப் பட்டமில்லை
   (1) படித்தால் பட்டம் பெறலாம்
   (2) பாடுபடுவது பயன் கருதியே
   (3) நன்றாகப் பாடினால் பரிசு பெறலாம்
   (4) முயற்சி உயர்ச்சி தரும் (.........)

● **24** தொடக்கம் **26** வரையிலான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்கள் ஒவ்வொன்றினதும் **ஒத்தகருத்தைத்** தெரிவுசெய்து அதனைக் குறிக்கும் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

24. அனுகூலம்
   (1) காரியசித்தி (2) ஆதாரம் (3) அனுமானம் (4) அனுமதி (.........)

25. ஆணித்தரம்
   (1) பிடிவாதம் (2) கண்டனம் (3) உறுதி (4) விருத்தாந்தம் (.........)

26. கொழுகொம்பு
   (1) மரக்கொப்பு (2) பற்றுக்கோடு (3) யானைத்தந்தம் (4) கொழுந்து (.........)

● **27** தொடக்கம் **29** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள சொல் ஒவ்வொன்றினதும் **எதிர்ப்பொருள்** தரும் சொல்லைத் தெரிவுசெய்து, அதனைக் குறிக்கும் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

27. இணங்கல்
   (1) வணங்கல் (2) உணங்கல் (3) புழுங்குதல் (4) பிணங்கல் (.........)

28. ஐது
   (1) அமுக்கம் (2) செறிவு (3) விரக்தி (4) அடக்கம் (.........)

29. காய்தல்
   (1) உவத்தல் (2) நனைதல் (3) பாய்தல் (4) குளிர் (.........)

● **30** தொடக்கம் **32** வரையுள்ள வினாக்களில் தரப்பட்டுள்ள சொல்லுடன் **பொருந்தாத** சொல்லைத் தெரிவுசெய்து, அதனைக் குறிக்கும் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

30. அணி
   (1) அழகு (2) நிரை (3) ஆபரணம் (4) ஆடம்பரம் (.........)

31. களி
   (1) களிப்பு (2) குறை (3) வெறி (4) களிமண் (.........)

32. வேலை
   (1) அர்த்தம் (2) கடல் (3) தொழில் (4) பணி (.........)

[பக் 5 ஐப் பார்க்க.

● **33** தொடக்கம் **35** வரையிலான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்கூட்டம் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான தனிச்சொல்லைத் தெரிவுசெய்து, அதனைக் குறித்து நிற்கும் **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

*(03 புள்ளிகள்)*

33. பலர் முன்னிலையில் சொல்லத் தகாத வார்த்தையைத் தவிர்த்து மறைமுகமாகச் சொல்லுதல்
(1) புறம்பேசல் (2) மறைபொருள் (3) இடக்கரடக்கல் (4) சுற்றிவளைப்பு (.........)

34. மேல்வரக் கடவதனை உணரும் அறிவுடையவன்
(1) தத்துவஞானி (2) தீர்க்கதரிசி (3) சான்றோன் (4) காலன் (.........)

35. இருபத்தைந்து ஆண்டு நிறைவைக் கொண்டாடும் விழா
(1) அமுதவிழா (2) மணிவிழா (3) வெள்ளிவிழா (4) வைரவிழா (.........)

36. பின்வரும் உரைப்பகுதியை வாசித்து அதன்கீழ் தரப்பட்டுள்ள வினாக்களுக்குச் **சுருக்கமாக** விடை தருக.

*(03 × 5 = 15 புள்ளிகள்)*

அநுராதபுரத்தின் வீழ்ச்சியானது இலங்கையின் அரசியல் வரலாற்றில் மட்டுமின்றி, அதன் விஞ்ஞான, தொழினுட்ப வரலாற்றிலும் ஒரு முக்கிய காலப்பகுதி முடிவடைந்ததைக் குறித்தது. அநுராதபுர ஆட்சிக் காலத்தின் இறுதிக் கட்டத்திலே இலங்கையிற் பொதுவாக வீழ்ச்சியும் சீரழிவும் ஏற்படலாயின; ஒழுங்கற்ற அரசியற் சூழ்நிலைகள் இவற்றை நன்கு எடுத்தியம்பின. தென் இந்திய அரசுகளின் ஆதிக்கச் சமநிலைக்காகப் போராடிய பூசல்களிலும் இலங்கை தலையிட்டதினாலேற்பட்ட சிக்கலே இந்நிலைக்குக் காரணமாக இருந்தது. இலங்கையின் வரலாற்றில் எந்தவொரு குறிப்பிட்ட ஆட்சியிலும் ஏற்பட்ட அபிவிருத்தியை எடுத்துக்காட்டுவனவாக நீர்ப்பாசனத் திட்டங்களும் சமய நினைவுச் சின்னங்களும் அமையின், ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளில் இவை இல்லாதிருந்தமை, குழப்பம் மிகுந்த இக்காலத்தில் இலங்கையில் அமைதியான சூழ்நிலை காணப்படவில்லையென்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

தென்னிந்திய அரசியலில் தலையிட்டதனால் ஏற்பட்ட போர்களும், அத்தகைய போர் முயற்சிகளிலே தேசிய வளங்களும் சத்தியும் வீணாக்கப்பட்டதனால் ஏற்பட்ட அரசியற் சீரழிவுகளும், இலங்கையை வளர்த்துவரும் சோழப் பேரரசின் ஆதிபத்தியத்திற்கு அடிமைப்படுத்தின. இலங்கை, தென்னிந்திய திராவிட நாகரிகத்துடன் இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளாக மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமையால், இருநாட்டு மக்களின் எண்ணங்களும் திறமைகளும் ஓரளவுக்கேனும் ஒன்று கலந்திருக்க வேண்டும். இஃது, இலங்கையின் விஞ்ஞான, தொழினுட்ப அபிவிருத்தியில் மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கக்கூடும். சோழர் இந்நாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்த காலத்தை அடுத்துள்ள காலத்தில் இந்து சமயமும் தமிழும் புத்த சமயத்திலும் சிங்கள மொழியிலும் ஏற்படுத்திய விளைவை நாம் அவதானிக்கலாம். நாட்டினது சுதந்திரத்தின் பாதுகாவலரான முதலாம் விஜயபாகுவின் ஆட்சியிற் கூடத் தமிழில் ஒரு கல்வெட்டு வெளியிடப்பட்டமை குறிப்பிடத்தக்கது. இது போன்று விஜயபாகுவின் பின் ஆட்சி செய்தோரின் அரச ஆணைகளும் தமிழில் வெளியிடப்பட்டன. "இது அக்காலத்து அபிவிருத்தியின் தரக் குறியீடாகக் கருதப்பட்டது" என்று செனரத் பரணவிதான குறிப்பிடுகின்றார்.

ஆனால், விஞ்ஞான தொழினுட்பத் துறைகளில் அத்தகைய ஒரு தாக்கம் ஏற்பட்டதை நாம் காணவில்லை. இம்முரண்பாட்டிற்கு இரு காரணங்களுள், முதலாவதாக, தமது சுதந்திரத்தை மீளப் பெற முனைந்த சிங்களவரை அடக்கித் தடுக்க வேண்டியிருந்ததனாற் சோழரும் நிலையானதோர் ஆட்சியை நிறுவுதல் முடியாதிருந்தது என்பது. ஆதலால், அவர்கள் விஞ்ஞானத்திலும் தொழினுட்பத்திலும் நாட்டிற்குப் பணிபுரிய இயலாதிருந்தனர். இரண்டாவதாக, இக்காலத்தில் தென்னிந்திய நாகரிகமானது புகழின் சிகரத்தில் நின்ற பொழுதிலும், அநுராதபுரக் காலத்தில் தானாகவே விருத்தியடைந்து விளங்கிய இலங்கைக்குத் தென்னிந்திய நாகரிகம் எவ்வகையிலும் உதவ முடியவில்லை என்பது. கற்சிற்பம் உலோகப் பணி ஆகியவற்றிற் சிங்கள மக்கள் காட்டிய திறமையைப்

[பக் 6 ஐப் பார்க்க.

பொறுத்தவரையில் இக்கூற்று மிகவும் பொருத்தமானது. பொலநறுவையிற் காணப்படும் 2ம் இலக்கச் சிவதேவாலயம் போன்ற இலங்கையிற் காணப்படும் சோழக் கற்கொத்து வேலைகள் அநுராதபுரத்தின் புத்த மதக்கட்டடங்கள் போன்று அழகுற அமையவில்லை. எனினும், மேற்குறித்த தேவாலயம் சோழக் கட்டடக் கலையைத் திறம்பட எடுத்தியம்புவதாகச் செனரத் பரணவிதான உறுதிப்படுத்தியுள்ளார். இவ்வாறே, அண்டத்தை இயக்க ஆனந்த நடமாடும் சிவன் சிலையும், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சிலையும் போன்ற, இந்துக் கடவுளர், அருட்குரவர் ஆகியோரின் வெண்கல உருவச் சிலைகள் தென்னிந்தியாவில் உருவாக்கப்பட்ட போதிலும், தாராதேவியின் உருவச் சிலை எடுத்துக்காட்டும் அத்துணைத் தொழினுட்பத் திறமையைக் காட்டுவனவாக அமையவில்லை. தென்னிந்திய படையெடுப்புக்களாலும் ஆட்சியாலும் ஏற்பட்ட அழிவுகள் பற்றியே வரன்முறை நூல்கள் குறிப்பிடுகின்றன. சிங்களத் தொழினுட்ப வல்லுநர்களும் கைவினைஞர்களும் அரசர் உதவியின்றித் தம் பணிகளை நிறைவேற்ற வாய்ப்பில்லாதிருந்தது. அநுராதபுரக் காலத்திற்கும், சோழர்களிடமிருந்து நாட்டை மீட்ட காலத்திற்கும் இடைப்பட்ட காலம் மிகவும் நீண்டதாக இருந்தமையால், இவ்விடைக்காலத்திலே தொழினுட்ப அறிவுத் திறமைகள் பாதுகாக்கப்பட்டுத் தலைமுறை தலைமுறையாகப் பேணப்பட்டமை பற்றி எவரும் வியப்படைவர். இது பற்றிய நேரடிச் சான்று எதுவும் இல்லையெனினும், பல நூற்றாண்டு கால இடைவேளைக்குப் பின்னர் அநுராதபுரத்தின் மரபுகள் தொடர்ந்து பேணப்பட்டமை, தொழினுட்ப வல்லுநர்களிடையேயும் கைவினைஞர்களிடையேயும் திறமைமிக்கதொரு சாதியமைப்புமுறை, அல்லது கம்மியக் குழுமம் இருந்தமையை எடுத்துக் காட்டுகிறது. இக்குழுமம், வேலை கற்றுக் கொள்பவர்கள், புதிய கைவினைஞர் ஆகியோருக்குப் பயிற்சியளித்து வந்தமையால் அவர்களின் திறமைகளைப் பாதுகாக்கக்கூடியதாக இருந்தது. முன்னைக் காலத்தில் நிலவிய வேலை வசதிகள் இல்லாதவிடத்து, மேற்குறித்த தேவைக்காக அவர்கள் ஏற்றுக்கொண்ட முறைகள் இக்காலத்திலும் அறியப்பட்டிருப்பின் அவை தொழினுட்பக் கல்வியின் அபிவிருத்திக்குப் பெரிதும் உதவும்.

(i) நாட்டில் நிலவிய அரசியல் உறுதித்தன்மை, அபிவிருத்தி என்பவற்றை அளவிடும் காரணிகளாக இங்கு குறிப்பிடப்பட்டுள்ளவை யாவை?

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

(ii) விஞ்ஞானம், தொழினுட்பம் என்பவற்றின் முன்னேற்றத்தில் தென்னிந்தியாவின் தாக்கம் ஏன் பாதிப்பை ஏற்படுத்தவில்லை?

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

(iii) சோழ மற்றும் தென்னிந்திய கலையாக்கங்களுடன் ஒப்பிடப்படும் உள்ளூர் கலையாக்கங்கள் யாவை?

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

..............................................................................................................................

[பக் 7 ஐப் பார்க்க.

(iv) கைவினைஞர்கள், தொழினுட்ப வல்லுநர்கள் ஆகியோரின் திறமைகள் பாதுகாக்கப்பட்டமைக்கான காரணங்கள் யாவை?

.......................................................................................................

.......................................................................................................

.......................................................................................................

.......................................................................................................

(v) கைவினைஞர்களும் தொழினுட்ப வல்லுநர்களும் தமது தொழிற்றிறனை முன்னேற்ற **முடியாது** போனமைக்கான காரணங்களைக் குறிப்பிடுக.

.......................................................................................................

.......................................................................................................

.......................................................................................................

.......................................................................................................

37. பின்வரும் உரைப்பகுதியை வாசித்து அதன் சாராம்சத்தை **மூன்றில் ஒரு பகுதியாகச்** சுருக்கி எழுதுக. சுருக்கத்துக்குப் பொருத்தமான **தலையங்கம்** இடுக. சுருக்கத்தின் இறுதியில் **சொற்களின் எண்ணிக்கையைக்** குறிப்பிடுக.

*(20 புள்ளிகள்)*

போர்த்துக்கேயத் திரிபு மொழிதானும் இன்று இலங்கையிற் பேசப்படுவதில்லை. ஆனால், போர்த்துக்கேய மொழியின் தாக்கம் தேசியமொழிகளில் அழியாமல் இன்றும் நிலவுகின்றது. சிங்களமும் தமிழும் போர்த்துக்கேய மொழியிலிருந்து கடன் வாங்கிய சொற்களைத் தினமும் மக்கள் பேசும் போது எடுத்தாள்கின்றனர். எனவே போர்த்துகேயர் இந்நாட்டு மொழிகளைக் கற்பதற்குப் பதிலாக, இலங்கை மக்களுடன் போர்த்துகேயர் நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்தமையால் போர்த்துக்கேய மொழி இலங்கையிற் பெரிதும் பேசப்படும் மொழியாயிற்று. காலப்போக்கில் இதன் செல்வாக்குத் தேசிய மொழிகளிலும் செறிந்தது. அதேசமயம் சிங்கள, தமிழ்ச் சொற்களும், இங்குப் பேசப்பட்ட இந்திய - போர்த்துக்கேய மொழியிற் கலந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

தொடக்கத்தில் இங்கு வந்த மிசனரிமார் மொழிபெயர்ப்பாளரின் உதவியுடன் சமய போதனை நடத்தினர். இது மிகவும் திருத்தியற்ற முறையென்பதை அக்குருமாரே உணர்ந்தனர் என்பதில் ஐயமில்லை. மொழிபெயர்ப்பாளர் மூலம் மதபோதனை நடத்துவது சிறந்த முறையன்று என்பதை அர்ச். பிரான்சிசு சவேரியார் உணர்ந்தது போல் வேறு எவரும் உணரவில்லை. இவர் கிழக்கு நாடுகளில் (கி.பி. 1542 - 1552) சமயப் பிரசாரஞ் செய்து கொண்டிருந்தபோது, மக்களுக்கு விளங்காத மொழியிலே போதனை செய்யும் பிரச்சினை தோன்றியது. எனவே, இவர் மிசனரிமார் தேசிய மொழிகளை அறிந்திருக்க வேண்டியதன் முக்கியத்துவத்தை வற்புறுத்தினார்.

மிசனரிமார் கீழைத்தேய மொழிகளைக் கற்பது கடினம் என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஆசியமொழிகளைக் கற்பதற்கு வேண்டிய நூல் எதுவும் ஐரோப்பிய மொழிகளில் இல்லையாதலால் முன்னோடிகளாக இருந்த மிசனரிமார், மொழிகளைப் பிரயோக முறைமூலம் கற்கவேண்டியராயினர். இம்மிசனரிமார்களே பின்னர் வந்த குருமார்களுக்கும், கல்விமான்களுக்கும் பெரும்பயன் நல்கிய இலக்கண நூல்களை எழுதியும், அகராதிகளைத் தொகுத்தும் அரும்பணி செய்தனர்.

நூல்கள் இல்லாமை தவிர, மிசனரிமார்கள் வேறுபல இன்னல்களையும் எதிர்நோக்க வேண்டியவராயினர். அவர்களுடைய மொழிக்கும் இந்நாட்டு மொழிகளுக்கும் பல வேறுபாடுகள் இருந்தன. இம்மொழிகளின் சொற்கள் ஐரோப்பியர்களுக்கு பெரிதும் இடர்ப்பாட்டை விளைத்தன. ஆசிய மொழிகளின் உச்சரிப்பும் அதேவிதமான இடர்பாட்டையே கொடுத்தது. இதற்குச் சான்றாக அந்தக் காலத்திலுள்ள போர்த்துக்கேயப் பதிவு ஏடுகளிற் சிறப்புப் பெயர்கள் (ஆட்பெயர் இடப்பெயர் போன்றவை) எழுதப்பட்டிருக்கும் வகையினை எடுத்துக் காட்டலாம்.

[பக் 8 ஐப் பார்க்க.

எனினும், தேசிய மொழிகளைக் கற்பதற்கு மிசனரிமார் முயற்சி செய்தனர் என்பதை நாம் அறிகின்றோம். கிறிஸ்தவ மதத்தை உள்ளூர் மக்களுக்குப் பரப்ப வேண்டுமென்ற ஆர்வமே அவர்களை இந்நாட்டு மொழிகளைக் கற்கத் தூண்டிற்று. அக்காலத்தில் இலங்கையிலிருந்த மிசனரிமார்களுள் இயேசு சபையைச் சேர்ந்தோரே சிங்களம், தமிழ் ஆகிய மொழிகளைப் படிப்பதிற் பேரார்வம் காட்டினர். பயிற்சியினாலும் கல்வியிற் காட்டிய அக்கறையினாலும் இச்சபையின் மிசனரிமார் பெரும் கல்வியாளராக விளங்கினர்.

38. பின்வரும் தலைப்புகளில் ஒன்றைத் தெரிவு செய்து ஏறத்தாழ **300** சொற்களில் பகுப்பாய்வுக் கட்டுரை ஒன்று எழுதுக.

*(30 புள்ளிகள்)*

(i) இனங்களுக்கிடையிலான சகவாழ்வுக்கு மொழி இலக்கியம் என்பனவற்றைப் பயன்படுத்தல்

(ii) தனியார் பல்கலைக்கழகங்களை தாபித்தலும் கல்வியின் பண்புத் தரமும்

(iii) வடகொரியா - ஐக்கிய அமெரிக்க அரசு தலைவர்களின் சந்திப்பும் ஆசியாவின் எதிர்காலமும்

(iv) இலஞ்சம் ஊழல் மோசடிகளை ஒழிப்பதில் சட்டத்தினதும் மரபுவழி சம்பிரதாயங்களினதும் முக்கியத்துவம்

[பக் 9 ஐப் பார்க்க.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

இலங்கை சட்டக் கல்லூரியின் கல்வியாண்டு 2019 இற்கு மாணவர்களை அனுமதிப்பதற்கான போட்டிப் பரீட்சை - 2018 செப்தெம்பர்

Competitive Examination for Admission of Students to Sri Lanka Law College for Academic Year 2019 - September 2018

**(02)** பொது அறிவு மற்றும் நுண்ணறிவு
General Knowledge and Intelligence

இரண்டு மணித்தியாலம்
Two hours

## பகுதி I - பொது அறிவு Part I - General Knowledge

பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள்

**மிக முக்கியம் :**




✳ விடை எழுதும்போது பின்வருமாறு இலக்கங்கள் எழுதப்படாத விடைத்தாள்கள் மதிப்பிடப்படமாட்டாது.

**1 2 3 4**

உமது சுட்டெண்ணை இங்கேயும் மூன்றாம் பக்கத்திலும் எழுதுக.

.....................................

சரியானது என உறுதிப்படுத்துகின்றேன்.

.....................................

நோக்குநரின் முதலெழுத்தொப்பம்

**முக்கியம் :**

✳ பாட இலக்கம் (02) பொது அறிவு மற்றும் நுண்ணறிவு வினாத்தாளானது பகுதி I பொது அறிவும், பகுதி II நுண்ணறிவு ஆகிய இரு பகுதிகளைக் கொண்டது.

✳ இரு பகுதிகளுக்குமான நேரம் இரு மணித்தியாலங்கள் ஆகும்.

✳ பகுதி I பொது அறிவு **06** பக்கங்களில் **50** வினாக்களைக் கொண்டுள்ளது.

✳ எல்லா வினாக்களுக்கும் விடைகளை **இத்தாளிலேயே** எழுதுக.

✳ மண்டப மேற்பார்வையாளரின் அறிவித்தலின் பின்னரே விடைகளை எழுதத் தொடங்குக.

✳ உமக்குத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப விடைகளை எழுதுக. அறிவுறுத்தல்களுக்கு அமையாத விடைகளுக்குப் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.

✳ விடைகள் தரப்படாவிட்டாலும் வினாத்தாளை மண்டப மேற்பார்வையாளரிடம் கையளிக்க வேண்டும்.

✳ **கறுப்பு** அல்லது **நீல** நிறப் பேனையினால் மாத்திரம் தெளிவாக விடைகளை எழுதுக. பென்சிலைப் பயன்படுத்த வேண்டாம்.

✳ இவ்வினாத்தாளைப் பரீட்சை மண்டபத்திற்கு வெளியே கொண்டு செல்லல், அதன் ஒளிப்பிரதியை (photocopy) எடுத்தல் என்பன குற்றங்களாகும்.

✳ தெளிவற்ற இலக்கம், தெளிவற்ற கை எழுத்துகள், அழிக்கும் வெண் மைப் பயன்பாடு, பென்சிலைப் பயன்படுத்தி எழுதிய விடைகள் என்பவற்றுக்கு மதிப்பீட்டின்போது புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| பக்க எண் | வினா எண் | பெற்ற புள்ளிகள் |
|---|---|---|
| 2 | 1 - 11 | |
| 3 | 12 - 21 | |
| 4 | 22 - 30 | |
| 5 | 31 - 44 | |
| 6 | 45 - 50 | |
| மொத்தம் | | |

**இறுதிப்புள்ளிகள்**

| | |
|---|---|
| இலக்கத்தில் | |
| எழுத்தில் | |

| | |
|---|---|
| விடைத்தாளைப் பரீட்சித்தவர் 1 | |
| விடைத்தாளைப் பரீட்சித்தவர் 2 | |
| மதிப்பீட்டுப் புள்ளிகளைப் பரீட்சித்தவர் | |
| பிரதம பரீட்சகர் | |

[பக். 2 ஐப் பார்க்க

● **1** தொடக்கம் **30** வரையிலான ஒவ்வொரு வினாவிற்குமுரிய **மிகச் சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** அல்லது **மிகக் கிட்டிய விடையினைத்** தெரிவு செய்து, அதற்குரிய **இலக்கத்தை** வினாவிற்கு எதிரே உள்ள **புள்ளிக்கோட்டின் மீது** எழுதுக.

1. இலங்கையின் பரப்பளவு சதுர கிலோமீற்றரில் எவ்வளவு?
   (1) 65,610 (2) 66,360 (3) 67,630 (4) 68,410 (………)

2. 2017 ஆம் ஆண்டின் மத்திய வங்கி அறிக்கையின் படி, இலங்கை ஊழியர் படையின் வீதமாக 2017 இல் நிலவிய வேலையின்மை வீதம் எவ்வளவு?
   (1) 3.1% (2) 4.2% (3) 4.8% (4) 5.1% (………)

3. பின்வருவனவற்றுள் ஐக்கிய இராச்சியத்துக்குரிய தொலைபேசி எண்ணாக அமையக்கூடியது எதுவாகும்?
   (1) +44 7404030651 (2) +91 7404030651 (3) +33 7404030651 (4) +61 7404030651 (………)

4. 2017 ஆம் ஆண்டின் இலங்கை மத்திய வங்கி அறிக்கையின்படி 2017 ஆம் ஆண்டிலே இலங்கையில் காணப்பட்ட ஒவ்வொரு ஆயிரத்திற்கு மொத்த இறப்பு வீதம் எவ்வளவாகும்?
   (1) 16.5 (2) 14.1 (3) 8.5 (4) 6.5 (………)

5. இலங்கையின் வடமேல் மாகாணத்தில் சுண்ணக்கல் அடையல் படிவுகள் எப் புவிச்சரிதவியல் காலத்தில் உருவானது?
   (1) பிளையோசீன் காலம் (2) பிளிஸ்டோசீன் காலம்
   (3) மயோசீன் காலம் (4) ஒலிகோசீன் காலம் (………)

6. 2017 ஆம் ஆண்டிலே இலங்கை மத்திய வங்கியின் அறிக்கையின்படி, 2017 ஆம் ஆண்டில் நாட்டின் கல்விக்காக ஒதுக்கப்பட்ட நிதியானது மொத்த தேசிய உற்பத்தியின் சதவீதமாக,
   (1) 1.2% (2) 1.9% (3) 3.5% (4) 6.2% (………)

7. மரவள்ளிக்கிழங்குடன் இஞ்சியை சேர்த்துண்பதால் உடலில் நச்சுத் தன்மை உருவாகுவது எந்த இரசாயனத்தின் தாக்கத்தினால் ஆகும்?
   (1) பொட்டாசியம் (2) ஆசனிக் (3) சயனைட் (4) மகனீசியம் (………)

8. அண்மையில் நடந்து முடிந்த ஆசிய விளையாட்டுப் போட்டிகள் எந்த நாட்டில் நடைபெற்றது?
   (1) இந்தியா (2) தாய்லாந்து (3) இந்தோனேசியா (4) பிலிப்பைன் (………)

9. ராயிக்வாண்டோ (Taekwondo) எனும் விளையாட்டானது எந்த நாட்டில் இருந்து தோற்றம் பெற்றதாகும்?
   (1) சீனா (2) தென்கொரியா
   (3) தாய்லாந்து (4) யப்பான் (………)

10. 2017 ஆம் ஆண்டின் இலங்கை மத்திய வங்கி அறிக்கையின் பிரகாரம், இலங்கை பாகிஸ்தான் நாட்டுடன் செய்து கொண்ட சுதந்திர வர்த்தக ஒப்பந்தத்தின் கீழ் 2017 ஆம் ஆண்டில் இலங்கை, பாகிஸ்தானுக்கு ஏற்றுமதி **செய்யாத** பொருள் எது?
    (1) தேயிலை (2) வெற்றிலை
    (3) இறப்பர் உற்பத்திப் பொருட்கள் (4) கிராம்பு (………)

11. 2017 ஆம் ஆண்டில் இலங்கை மத்திய வங்கி அறிக்கையின்படி 2017 ஆம் ஆண்டில் இந்நாட்டிற்குள் வந்த வெளிநாட்டவர்களின் எண்ணிக்கையினை நாடுகளின் அடிப்படையில் இறங்குவரிசையில் குறிப்பிடும் போது சரியான வரிசையாக அமைவது எதுவாகும்?
    (1) இந்தியா, ஐக்கிய இராச்சியம், சீனா, ஜேர்மனி
    (2) சீனா, இந்தியா, ஐக்கிய இராச்சியம், ஜேர்மனி
    (3) சீனா, ஐக்கிய இராச்சியம், ஜேர்மனி, இந்தியா
    (4) இந்தியா, சீனா, ஐக்கிய இராச்சியம், ஜேர்மனி (………)

[பக். 3 ஐப் பார்க்க

12. "முறைதகா பாலுறவு (Incest)" என்பதன் கீழ் தவறாகக் கொள்ளப்படுவது பின்வருவனவற்றுள் எதுவாகும்?
    (1) சிறுவர்களை பாலியல் துஷ்பிரயோகத்திற்கு உட்படுத்துதல்
    (2) கப்பம் பெறுவதற்காக சிறுவர்களை கடத்துதல்
    (3) பெற்றோரின் ஒருவரது பாட்டனார் தனது பேரப்பிள்ளையுடன் பாலியல் உறவில் ஈடுபடல்
    (4) உளவியல் குறைபாடு காரணமாக அப்பாவித்தனமான பெண்ணுடன் பாலியல் உறவில் ஈடுபடல் (.........)

13. சந்தேக நபரொருவர் பொலிசாரினால் கைது செய்யப்பட்ட பின்னர் நீதவான் முன்னிலையில் ஒப்படைக்கப்பட வேண்டியது,
    (1) 12 மணித்தியாலங்கள் முடிவடைவதற்குள்
    (2) 24 மணித்தியாலங்கள் முடிவடைவதற்குள்
    (3) 72 மணித்தியாலங்கள் முடிவடைவதற்குள்
    (4) ஆரம்பக்கட்ட விசாரணை முடிவடைந்தவுடன் (.........)

14. முற்கூட்டியே வீசா பெறாமல் இலங்கையர் செல்லக்கூடிய நாடானது,
    (1) இந்தியா (2) குவைட்
    (3) சவூதி அரேபியா (4) சிங்கப்பூர் (.........)

15. பின்வருவனவற்றுள் 'Residency' எனும் உத்தியோகபூர்வ பங்களாவில் வசிக்கும் இந்நாட்டுக்குரியவர் யார்?
    (1) அரச அதிபர் (2) சபாநாயகர்
    (3) பிரதம நீதவான் (4) சட்டமா அதிபர் (.........)

16. தேசமொன்றின் அதிகாரங்களை பிரித்தல் தொடர்பான அடிப்படை தத்துவங்களை முன்வைத்தவர் யார்?
    (1) டய்சி (Dicey) (2) யஸ்டினியன் (Justinian)
    (3) அரிஸ்டோட்டில் (Aristotle) (4) மொன்டேஸ்கியு (Montesquieu) (.........)

17. மனித பரிணாம வளர்ச்சியில் முதன்முறையாக தமது பயன்பாட்டுக்காக கருவிகளை செய்தவர்கள் பின்வருவோர்களில் யார்?
    (1) ஹோமோ இரக்டஸ் (Homo erectus)
    (2) ஹோமோ நியாண்டர்தலினஸ் (Homo neanderthalensis)
    (3) ஹோமோ ஹெபிலஸ் (Homo habilis)
    (4) ஒஸ்ரோலோபிதெகஸ் (Australopithecus) (.........)

18. வானொலி அலைவரிசைகளில் உள்ள 'AM' என்ற சுருக்கப்பதம் கீழே தரப்பட்டுள்ளவற்றில் எதிலிருந்து தோற்றம் பெற்றுள்ளது?
    (1) Angelo Marconi (2) Anno Madian
    (3) Amperes (4) Amplitude Modulation (.........)

19. இலங்கை தவிர, வேறு எந்த நாட்டில் உரோமன் டச்சு சட்டம் (Roman Dutch Law) நடைமுறையில் உள்ள நாடு;
    (1) ஹொலண்ட் (2) தென் ஆபிரிக்கா
    (3) பிரேசில் (4) இந்தோனேசியா (.........)

20. இந்நாட்டின் சிறுபான்மையினரின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டிருப்பது 1947 ஆம் ஆண்டின் அரசியலமைப்பின் எப்பிரிவின் கீழாகும்?
    (1) 14 ஆம் பிரிவு (2) 32 ஆம் பிரிவு
    (3) 29 ஆம் பிரிவு (4) 43 ஆம் பிரிவு (.........)

21. இறுவட்டு (CD) ஒன்றில் தரவுகளை பதிவு செய்யப்படக்கூடிய மிகக்கூடிய கொள்ளளவு எவ்வளவு?
    (1) 200 MB (2) 300 MB (3) 500 MB (4) 700 MB (.........)

[பக். 4 ஐப் பார்க்க

22. எந்தவொரு தொழில் வழங்குநரின் மூலம் ஊழியரொருவர் சேவையில் இருந்து நீக்கப்படும் போது, அந்த ஊழியர் எத்தனை தொழிலாளர் நீதிமன்றில் நிவாரணத்தைப் பெறவேண்டும் எனின், அதற்காக முறைப்பாடு செய்ய வேண்டியது,
(1) 30 நாட்கள் முடிவடைய முன்னர் (2) 06 கிழமை முடிவடைய முன்னர்
(3) 03 மாதங்கள் முடிவடைய முன்னர் (4) 06 மாதங்கள் முடிவடைய முன்னர் (.........)

23. 1815 ஆம் ஆண்டு கண்டி ஒப்பந்தத்தினை பிரதானமாக வரைவு செய்தவராகக் கருதப்படுபவர் யார்?
(1) ஜோன் டொலி (John D'oyly)
(2) ரோபேர்ட் பிரௌவ்ன்ரிக் (Robert Brownrigg)
(3) கெமரூன் (Cameron)
(4) ஹென்ரி டெய்லர் (Henry Tailor) (.........)

24. இந்நாட்டின் நீதிமன்றங்களினால் வழங்கப்படும் தீர்ப்புக்கள் தொடர்பாக பிரித்தானியாவின் பிரிவி (Privy) சபைக்கு மேன்முறையீடு செய்யும் நடைமுறை முடிவுக்கு வந்த ஆண்டு,
(1) 1933 ஆகும் (2) 1948 ஆகும் (3) 1972 ஆகும் (4) 1978 ஆகும் (.........)

25. அண்மையில் காலமான இந்தியாவின் முன்னாள் பிரதமர் அடல் பிகாரி வாஜ்பாய் இன் பதவிக் காலம் தொடர்பாக **உண்மையற்ற** கூற்று பின்வருவனவற்றுள் எதுவாகும்?
(1) இவரது பதவிக் காலத்தில் இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் இடையில் போர் ஏற்படவில்லை.
(2) இவர் மூன்று தடவைகள் பிரதமராக பதவி வகித்தார்.
(3) இவர் இந்தியாவிற்கும், பாகிஸ்தானுக்கும் இடையில் தொடரூந்து சேவையினை உருவாக்க காரணமானார்.
(4) பாகிஸ்தானுக்கு எதிரான கார்கில் போரில் இந்தியாவிற்கு தலைமை வழங்கியவர் ஆவார். (.........)

26. உலக சந்தையில் இலங்கையின் தேயிலை ஏற்றுமதிக்கு தற்காலத்தில் போட்டியாக உள்ள நாடுகள் எவை?
(1) இந்தோனேஷியா மற்றும் துருக்கி (2) இந்தியா மற்றும் கென்யா
(3) இந்தியா மற்றும் சீனா (4) சீனா மற்றும் கென்யா (.........)

27. தற்போதைய அரசியலமைப்பின் படி ஆரம்பத்தில் 'தேசிய மொழியாக' காணப்பட்டிருந்த தமிழ்மொழி 'அரச கரும மொழியாக' மாற்றமடைந்தது பின்வரும் எந்த அரசியலமைப்பின் திருத்தத்தின் மூலமாகும்?
(1) 6 ஆவது அரசியலமைப்பு திருத்தம்
(2) 12 ஆவது அரசியலமைப்பு திருத்தம்
(3) 13 ஆவது அரசியலமைப்பு திருத்தம்
(4) 16 ஆவது அரசியலமைப்பு திருத்தம் (.........)

28. எலிகளின் சிறுநீரினால் மனித உடலில் நுழையும் விஷக் கிருமியினால் உருவாகும் நோய் எதுவாகும்?
(1) லெப்டோஸ் பயிரோசிஸ் (2) மெனின்யய்டிஸ்
(3) சிக்குன்குன்யா (4) டொக்சோப்லாஸ்மோஸிஸ் (.........)

29. 2017 ஆம் ஆண்டில் இலங்கை மத்திய வங்கியின் அறிக்கையின்படி, செல்லிடத் தொலைபேசிகள் உள்ளடங்கலாக, 2017 ஆம் ஆண்டில் இலங்கையில் தொலைபேசிப் பாவனையின் விகிதம் யாது?
(1) 100 பேரிற்கு 88 தொலைபேசிகள் (2) 100 பேரிற்கு 126 தொலைபேசிகள்
(3) 100 பேரிற்கு 184 தொலைபேசிகள் (4) 100 பேரிற்கு 143 தொலைபேசிகள் (.........)

30. குற்றம் சாட்டப்பட்டவர் ஒருவரின் வாக்குமூலம் சட்டரீதியாக ஏற்றுக்கொள்ளப்படுவது அது யார் முன்னிலையில் வழங்கப்படும் போதாகும்?
(1) சமாதான நீதவான்
(2) நீதவான்
(3) உறுதிமொழி ஆணையாளராக உள்ள சட்ட வழக்கறிஞர்
(4) உதவி பொலிஸ் மேலதிகாரியாக அல்லது அதற்கு மேல் பதவி வகிக்கும் பொலிஸ் உத்தியோகத்தர் (.........)

/பக். 5 ஐப் பார்க்க

● **31** தொடக்கம் **50** வரையான ஒவ்வொரு வினாக்களுக்கும் **சரியான விடையினை** தரப்பட்டுள்ள **புள்ளிக்கோட்டில்** எழுதுக.

31. அரச நிதிமூலங்களை முறைகேடாகப் பாவித்தல் மற்றும் இலஞ்சம், ஊழல்களை தேடியறிந்து நீதியை நிலைநாட்டுவதற்காக அண்மையில் உருவாக்கப்பட்டுள்ள சிறப்பு உயர்நீதிமன்றின் மூவர் அடங்கிய நீதிபதிகளின் தலைவர் யார்?

..................................................................................................................................................

32. 2017 ஆம் ஆண்டு, இந்நாட்டின் நன்னீர் மீன்பிடி உற்பத்தியில் பாதிப்பை ஏற்படுத்திய இறால்களுக்கு தொற்றிய நோய் எப்பெயர் கொண்டு அழைக்கப்படுகிறது?

..................................................................................................................................................

33. மாத்தளை மாவட்டத்தில் 'இப்பன்கட்டுவ' எனுமிடத்தில் எத்தகைய தொல்பொருள் சிதைவு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது?

..................................................................................................................................................

34. "சட்டத்தின் ஆட்சி (Rule of Law)" தொடர்பான கோட்பாட்டை அறிமுகம் செய்தவர் யார்?

..................................................................................................................................................

35. புவிச்சரிதவியலாளர்கள், 'உலகில் மறைந்திருந்த 8 ஆவது கண்டத்தினை' எப்பெயர் கொண்டு அழைப்பர்?

..................................................................................................................................................

36. இலங்கை மற்றும் சீனா ஆகிய நாடுகளிடையே வரலாற்று ரீதியான இறப்பர் - அரிசி ஒப்பந்தத்துக்கு இலங்கை சார்பாக கையொப்பமிட்டவர் யார்?

..................................................................................................................................................

37. 'டெசிபல்' அலகு எதனை அளப்பதற்காக பயன்படுத்தப்படுகிறது?

..................................................................................................................................................

38. நிருவாக அதிகாரி அல்லது அரச உத்தியோகத்தர் ஒருவர் மூலம் நிறைவேற்றப்படவேண்டிய யாதாயினும் கடமையினை நிறைவேற்ற கட்டளையிடவேண்டி மேன்முறையீட்டு நீதிமன்றில் பெறவேண்டிய நீதிப் (Writ) பேராணை எது?

..................................................................................................................................................

39. இலங்கை வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளதன்படி, இந்தியாவின் காலிங்க தேசத்துடன் போரினைப் பிரகடனம் செய்த இலங்கை மன்னன் யார்?

..................................................................................................................................................

40. சர்வதேச நீதிமன்றில் நீதியரசராகவும், அதன் பிரதித் தலைவராகவும் கடமையாற்றிய இலங்கையின் முன்னணி நீதவான் யார்?

..................................................................................................................................................

41. இந்நாட்டின் உச்ச நீதிமன்றம் நீங்கலாக ஏனைய நீதிமன்றங்களின் அதிகாரங்கள் தொடர்பான ஏற்பாடுகள் எந்த சட்டமூலத்தின் பிரகாரமாகும்?

..................................................................................................................................................

42. இந்நாட்டில் நிறைவேற்றுக் குழு முறை நடைமுறைப்படுத்தப்படுவது எந்த சட்டமூல மறுசீரமைப்புக்களின் பரிந்துரைகளின் கீழாகும்?

..................................................................................................................................................

43. இலங்கை மத்திய வங்கியின் 'நாணய சபையின் (Monetary Board)' தற்போதைய தலைவர் யார்?

..................................................................................................................................................

44. 2018 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஆட்சியிலுள்ள கட்சியினரால் முன்வைக்கப்பட்ட ஆனால் ஆட்சியிலுள்ள கட்சியின் பாராளுமன்ற உறுப்பினர்களால் எதிராக வாக்களிக்கப்பட்டு தோற்கடிக்கப்பட்ட ஆவணம் எது?

..................................................................................................................................................

[பக். 6 ஐப் பார்க்க

45. இறக்குமதிக்காக தடைவிதிக்கப்பட்டிருந்த, தேயிலை மற்றும் இறப்பர் செய்கையின் தேவைக்காக அண்மையில் தடைநீக்கம் செய்யப்பட்ட களைநாசினி எது?

........................................................................................................................

46. பிரித்தானியாவின் ஆட்சிக் காலத்தில் இந்தியா மற்றும் சீனா ஆகிய நாடுகளுக்கு இடையில் காணப்பட்ட தேச எல்லை எப்பெயர் கொண்டு அழைக்கப்பட்டது?

........................................................................................................................

47. இந்தியாவிற்கான இலங்கை உயர்ஸ்தானிகராக அண்மையில் நியமிக்கப்பட்டவர் யார்?

........................................................................................................................

48. 2018 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் நாஸா நிறுவனம் மூலம் சூரியனின் ஒளி வட்டத்தினை கண்காணிக்கவென அனுப்பப்பட்ட விண்வெளிக்கலத்தின் பெயர் என்ன?

........................................................................................................................

49. தற்போதைய அரசியலமைப்பின்படி, 'நிருவாகப் பொறுப்புகளுக்காக பாராளுமன்ற ஆணையாளராக' யார் பதவி வகிக்கின்றார்?

........................................................................................................................

50. ஒவ்வொரு ஆண்டிலும் உலக சுற்றாடல் தினம் அனுஷ்டிக்கப்படுவது எப்போது ஆகும்?

........................................................................................................................

***

